

# பெண் வேஷம்

பள்ளி நாட்களில் நான் 'வீரசிம்மன்' நாடகத்தில் பெண் வேஷம் போட்டதைப் பற்றி உங்களுக்குச் சொல்ல வேண்டும் என்றால் வரதனைப் பற்றிச் சொல்லித்தான் ஆக வேண்டும்.

வரதன் அப்போது என் வயசுக்காரர்களில் சுமார் ஒரு அரிஸ்டாட்டிலாக இருந்தான். எங்களைவிட அதிக வயதாக இருந்தாலும் ஏகவசனத்தில்தான் கூப்பிடுவோம். அவன் முழுப் பெயர் வரதராஜனா, வரதாச்சாரியா தெரியாது. பாட்டி ஒரு நாள் நான் பாக்குப் போட்டுக்கொண்டிருப்பதைப் பார்த்து "வரதன்கூட சேர்ந்துட்டியோ இல்லியோ? உருப்பட மாட்டே! இன்னிக்குப் பாக்கு போட்டுப்பே, நாளைக்குப் புகையிலை, நாளன்னிக்கு ஏதோ ஒரு தெருவுக்குப் போவே" என்று திட்டி விசிறிக் கட்டையால் அடித்தாள்.

வரதனுடன் சகவாசத்துக்குத் தடையுத்தரவு எல்லா வீட்டிலும் உண்டு. அதனாலேயே நாங்கள் எல்லோரும் வரதனிடம்தான் சினேகம் தேடிச் சென்றோம். அவனிடம் சிறுவர்களுக்கும், அவனுக்குச் சிறுவர்களிடமும் ஒரு கவர்ச்சி இருந்தது. எல்லோரையும் கவனிப்பான், கட்டிக்கொள்வான், திடீர் என்று முழங்கையை முதுகுப்புறமாக மடக்குவான்.

அப்போது அவனுக்கு முப்பத்தைந்து வயது இருக்கலாம். வேலையேதும் பார்த்ததாகத் தெரியவில்லை, கார்வாரும் மிராசு மிட்டாதாத்தனமும் ரத்தத்தில் ஊறியிருந்த பிரகிருதி. சிவப்பாக கமகமவென்று இருப்பான். வழுக்கை விழ ஆரம்பித்திருந்தாலும் அவன் முகத்துக்குப் பொருத்தமாகத்தான் இருந்தது. 'கொள்ளிடம் சலவை சாலை'யில் வெளுத்த மல் ஜிப்பாவுக்குள் தாயத்துகளும் மொசமொசவென்று ரோமமும் தெரியும். ஜிவி என்று எம்ப்ராய்டரி போட்டு கைக்குட்டையைத் தோளில் துண்டுபோல ஸ்டைலாகப் போட்டிருப்பான்.

வரதனுக்குக் கல்யாணம் ஆகி மனைவி சின்னதாக ரங்கவிலாஸ் மரப்பாச்சிபோல வீட்டுக்கு உள்ளே இருந்தாள். அவளை நான் அதிகம் பார்த்ததில்லை. மகேந்திர மங்கலத்தில் அவனுக்கு நிலம் இருந்தது. அந்தப் பச்சை ஏக்கராக்களிலிருந்து வருஷாந்திரத்துக்கும் நெல், உளுத்தம் பருப்பு, துவரம் பருப்பு எல்லாம் வந்துவிடும். தை மாசம் குத்தகைக்காரன் கக்கத்தில் துண்டுடன் பக்கத்தில் வாழைத்தாருடன் நிற்பதைப் பார்த்திருக்கிறேன்.

வரதன் திண்ணையில் உட்கார்ந்திருக்கும் தோரணையே அலாதி. கால் மேல் கால் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தாலே தலைமை தெரியும். கொஞ்சம் உன்னிப்பாகப் பார்த்தால் சிம்மாசனம் தெரியும்.

பளிச்சென்று கிராப்பு வாரி பவுடர் போட்டுக்கொள்வான். நெற்றியில் புனுகு கலந்து பண்ணின ஏதோ ஒரு சேர்க்கையில் சிறிய கரிய பொட்டு. சிரித்தால் வரிசையும் வெற்றிலைப் பழக்கமும் தெரியும். திண்டுக்கல் துளிர் வெற்றிலைதான் போடுவான். செம்பில் தண்ணீர் எப்போதும் இருக்கும். பன்னீர்ப் புகையிலை சேர்த்துப் போட்டுப் போட்டு அரைமணிக்கு ஒருமுறை கொப்பளித்துக் கொண்டே இருப்பான். வெள்ளி தம்ளரில்தான் காப்பி. வெற்றிலைப் பெட்டிக்குள் ஜாதிக்காய், ஜாதி பத்ரி, வறுவல் சீவல் எல்லாம் இருக்கும். எங்கே தொட்டாலும் வாசனையாக இருப்பான். கீ கொடுக்கும் கிராமபோனில் 'மீரா' பாட்டுக்களைத் திரும்பத் திரும்பக் கேட்டுக்கொண்டிருப்பான். வேஷ்டியில் சதா ஜரிகை.

இந்த வரதனால்தான் நான் 'வீரசிம்மன்' நாடகத்தில் பெண் வேஷம் போடும்படியாகிவிட்டது. சொல்கிறேன்.

ஒருநாள் காலை எப்போதும்போலப் பள்ளிக்கூடம் போவதற்குள் வரதனை ஓடிப்போய்ப் பார்த்துவிட்டு வரலாம் என்று அங்கே

போனேன்.

"வாடா 'ஈர்க்குச்சி' " என்றான். யாரையும் பேர் சொல்லிக் கூப்பிட மாட்டான். ஈர்க்குச்சி, மோர்க்குழம்பு என்று புனைபெயர்கள் தான். ஏற்கெனவே நான்கு பையன்கள் இருந்தார்கள். ஒருவன் வரதனுக்கு உடம்பு பிடித்துவிட்டுக்கொண்டிருந்தான்.

"டேய், இவனுக்கு என்ன வேஷம் கொடுக்கலாம்?" என்றான்.

"எதுக்கு வரதா?" என்றேன்.

வந்த உடனே என் கையை முறுக்கிக் கன்னத்தில் செல்லமாகத் தட்டினான்.

"டேய் உனக்குத் தெரியாது?" என்று வாணிவிலாஸ் பிரஸ்ஸில் அச்சடித்திருந்த பஞ்சுமிட்டாய் கலர் நோட்டீஸைக் காட்டினான்.

அதில், 'காணத் தவறாதீர்! வீரசிம்மன் அல்லது உண்மையின் வெற்றி. சமூக சரித்திர நாடகம்' என்று பெரிசாகப் போட்டு இந்தப் பக்கம் கதை, வசனம், பாடல்கள், டைரக்ஷன் எல்லாம் ஜிவி என்றும் போட்டிருந்தது. இடது பக்கம் வரதன் அட்டைக் கிரீடம் வைத்துக்கொண்ட போட்டோவும் அதன்கீழ் 'வீரசிம்மனாக ஜிவி' என்றும், வலது பக்கம் அவனுக்கு எதிராக இடுப்பில் சரிகை ஒட்டியாணமும், தலைமேல் கிரீடமும் மார்மேல் ப்ரூச்சுமாக ஒருத்தி நின்றுகொண்டிருந்தாள்.

'குஸுமாவாக திருச்சி தாராமணி' என்று அவள் கீழ் அச்சடித்திருந்தது. 'டிக்கெட்டுகள் ரூபா இரண்டு, ஒன்று. எக்காரணத்தைக் கொண்டும் டிக்கெட் பணம் வாபஸ் தரப் பட மாட்டாது' என்று போட்டு எனக்குச் சற்றும் புரியாத வகையில் 'அதிர்ஷ்ட டிக்கெட்டுக்கு குலுக்கல் முறையில் பரிசு உண்டு – ஒரு பசுமாடு!'

"பசுமாடா?" என்று கேட்டேன்.

"ஆமாண்டா."

"நிஜ பசுமாடா?"

"ஆமாண்டா, அப்பதான் டிக்கெட் விக்கறது ஈஸி!"

எனக்குப் பசுமாடு என்ன விலை இருக்கும் என்று ஐடியாவே இல்லை, ஆனால் மேடையில் எப்படி பசுமாட்டை ஓட்டிக்கொண்டு வந்து அதை ஒரு பிரமுகர் 'இந்தா' என்று பரிசு பெற்றவருக்குக் கொடுக்க முடியும் என்பது வியப்பாக இருந்தது. அதைக் கேட்டு விசாரிப்பதற்குள் எனக்கு ஒரு புதிய கவலை ஏற்பட்டுவிட்டது. அது – வரதன் என்னை மேலும் கீழும் பார்த்து 'டேய் இவந்தாண்டா சரி' என்று சொன்னது.

"எதுக்கு?" என்றேன்.

"ஒண்ணுமில்லே, டிராமாவில் ஒரு சின்ன பார்ட்டு."

"என்ன பார்ட்டு?" என்றேன் பதறிப்போய்.

"வீரசிம்மனுக்கு விசிர்றதுக்கு ஒரு சேடி வேணும்."

"சேடின்னா பொம்மனாட்டியா?"

"ஆமாம் . . . ஏய் . . . ஏய் அவனைப் போய்ப் பிடிங்கடா!" கேவி ஓடிவந்து என்னைப் பிடித்து இழுத்து வந்தான். "வேஷம்னா உடனே ஓடறியே! இத பார், இவன்தான் சேவகன், இவன் சேனாதிபதி. தாராமணி வரா, நான் இருக்கேன். உனக்கு சின்ன பார்ட்டு. இதுக்கென்ன தயக்கம்!"

"வரதா, நான் வரலை, எனக்குத் தெரியாது. எனக்குப் பேச வராது."

"பேசற பார்ட்டு இல்லை. ராஜா பக்கத்தில் நின்னுண்டு விசிறணும். ஒரு வார்த்தை வசனம் கிடையாது. இவனுக்கெல்லாம் எத்தனை வசனம் தெரியுமா? என்னடா?" என்று அம்பியைக் கேட்டதும் அவன் கடகடவென்று "ஈதிப்படியிருக்க நீர் எப்படி எம் நாட்டின்மேல் படையெடுக்கப்போம்" என்றான்.

எனக்கு என்னவோ செய்தது. ஆறாம் வகுப்பில் இருந்தபோது பாரதியார் வேஷம் போட்டு தலைப்பாகை உருண்டது ஞாபகம் வந்தது. எனக்கு மேடை என்றாலே உதறும். முழங்காலுக்குக் கீழ் பஞ்சு சேர்ந்துகொள்ளும்.

"இல்லை வரதா! வேண்டாம், நான் மாட்டேன். நீ வேற எது வேணும் சொல்லு. வீடு வீடாப் போய் மாமி மாமியாப் போய் பசுமாடு ஃபர்ஸ்ட் ப்ரைஸ்னு சொல்லி டிக்கெட் விக்கறேன், நோட்டீஸ் ஒட்டறேன்."

"டிக்கெட் விக்கறதைப் பத்தி எனக்கு கவலையே இல்லைடா! நடிக்கிறலதான் ஆளு குறையறது. அதெல்லாம் பேசப்படாது. புதன்கிழமை ரிகர்சலுக்கு வந்துர்றே தெரியுமோல்லியோ. அப்புறம் இங்க வாடா" என்று தனியாக அழைத்துத் தன் பிரம்மாஸ்திரத்தை உபயோகித்தான். ரகசியமாக, "உனக்குப் பாக்கணுமா இல்லையா?" என்றான்.

"எதை?"

"கேக்கறதைப் பாரு! அன்னிக்குப் பாக்கலை? பாத்தியா! கேக்கற போதே மூஞ்சி எல்லாம் ஜிவ்வுன்னு சிவந்துக்கறதே! நீ இந்த பார்ட் மட்டும் பண்ணிரு. ஸ்டேஜ் ஓரத்தில் இருந்துண்டு விசிறணும் . . . எல்லாத்தையும் காட்டிர்றேன்."

"விசிறாமயே ராஜா இருக்கக்கூடாதா?"

"கதைக்கு ஒத்து வராதே. அவன் சிற்றரசன் இல்லையே!"

"நீதான் கதை எழுதியிருக்கே, மாத்திரேன்" என்றதற்கு "நீ போடா, உனக்கு சாயங்காலம் வா காட்டறேன்" என்றான்.

"காட்டறேன்" என்று சொன்னது, மிடில் ஈஸ்ட்டில் இருந்தபோது அவன் மாமாவோ யாரோ அவனுக்கு அனுப்பி வைத்த பிரத்தியேகப்

படங்கள்தாம். எனக்குச் சில ஸாம்பிள் காட்டியிருக்கிறான். அதில் வெள்ளைக்கார ஆண்களும் பெண்களும் விதவிதமாகக் கெட்ட காரியங்கள் செய்துகொண்டிருந்தார்கள். சின்னச் சின்னதாகக் கையகலத்துக்கு போட்டோ படங்கள். சில படங்களில் இரண்டு பேர்தான் இருந்தார்கள். சிலவற்றில் கூட்டமாக இருந்தது.

அந்த போட்டோக்களின் முழு விபரங்கள் இப்போது எனக்கு ஞாபகம் இல்லை. ஆனால் விதிவிலக்கில்லாமல் எல்லோரும் பூட்ஸ¬ம் ஸாக்ஸ¬ம் போட்டிருந்தது தெளிவாக நினைவிருக்கிறது. பூட்ஸ் ஸாக்ஸ்! வேறு எதும் கிடையாது. எப்படி பூட்ஸைக் கழற்றாமல் மற்றவற்றைக் கழற்றியிருக்க முடியும் என்பது எனக்கு ரொம்ப நாளாகவே சந்தேகம். 'தலை வழியாடா' என்று சொல்லி வரதன் காட்டியது ஒரு சில படங்களே. அந்த மாதிரி நூறு இருக்கிறதாகவும், அதைக் காட்டுகிறேன், காட்டுகிறேன் என்றும் என்னை வேலை வாங்கிவிடுவான்!

"நீ எவ்வளவு வேகமா ஓடுவே?" என்றான்.

"ஏன்?"

"ஓடிப்போய் டிபிஜி கடையில போய் ஒரு பொட்லம் பன்னீர்ப் புகையிலை வாங்கிண்டு வந்துரு என்ன!"

"நான் பொகையிலை வாங்கிண்டு வரேன், என்னை டிராமாவில இருந்து விட்டுர்றியா?"

"நீ போய் வாங்கிண்டு வாயேன் சொல்றேன். முப்பது செகண்டுக் குள்ள வா, உன்னை விட்டுர்றேன்" என்றான்.

நான் தலை தெறிக்க, நாக்கு உலர தேர்முட்டிக்கு ஓடினேன். டிபிஜி எப்போதும்போல் தனக்குள்ளே பேசிக்கொண்டிருந்தான். டிபிஜி கடை ரங்கன் கடைக்கு எதிர்த்தாற்போல இருக்கும். மளிகை சாமான்கள், வெற்றிலை பாக்கு, சிகரெட் வகையறாக்கள், பாடப் புத்தகங்கள், காப்பிப் பொடி, ரப்பர் பந்து எல்லாம் கலந்து கட்டி விற்கும் ஒருவகையான 'டிபார்ட்மெண்ட் ஸ்டோர்.'

டிபிஜி உட்கார மாட்டான். எப்போதும் நின்றுகொண்டுதான் இருப்பான். இதன் காரணத்தைப் பற்றி அபிப்ராய பேதம் இருந்தது. ஒரு தடவை வரதன் கேட்கச் சொல்லி 'டிபிஜி உட்காரு' என்று சொல்லிவிட்டேன். பளேர் என்று கன்னத்தில் அறைந்து விட்டான். அதன் காரணம் எனக்கு இதுவரை புரியவில்லை. இன்றைக்கு டிபிஜி அறைகிற மூடில் இல்லை. "என்ன தம்பி, வரதய்யர் டிராமா போடறாராமே? நான்கூட டிக்கெட் வாங்கியிருக்கேன். பசுமாடு கிடைக்குமில்லை?" என்றான்.

"கிடைக்கும் டிபிஜி!"

"நீ பாத்தியா மாட்டை? கன்னுக்குட்டி ஏதும் இல்லையே?"

"இல்லை" என்று சொல்லிவிட்டு அவசரத்தில் ஓடிவந்து வரதனிடம்

புகையிலைப் பொட்டணத்தைக் கொடுத்து "இப்ப என்னை விட்டுரு வரதா" என்றேன்.

"எங்க? நாப்பத்து எட்டு செகண்ட் ஆயிடுத்தே?" என்று தன் வாட்சைப் பார்த்துச் சொல்லி "புதன்கிழமை வந்துடு" என்று சொன்னான். "இதபார்றா உன் கர்ள் ஃப்ரண்ட்! என்னடி நீ எச்சுமி பொண்ணுதானே, உங்கம்மாவை விசாரிச்சதா சொல்றியா. தாவணி போட்டுண்டிருக்கியா?" என்று பள்ளிக்கூடம் போய்க் கொண்டிருந்த கமலியின் கன்னத்தைக் கிள்ள அவள் "போங்க மாமா" என்று ஓடினாள்.

"இவம்மாவை நான் மொட்டை மாடில சொல்லிச் சொல்லி..." என்று வரதன் ஏதோ ஆரம்பிக்க எனக்கு ஸ்கூலுக்கு நேரமாகி விட்டதால் புறப்பட்டுவிட்டேன்.

தேசிகர் கிளாசில் எல்லாம் வயிற்றைச் சங்கடம் பண்ணியது. எப்படியாவது டிராமாவிலிருந்து தப்பித்துவிட வேண்டும். பாட்டி கேட்டால் கொன்று போட்டுவிடுவாள்.

புதன்கிழமை ரிகர்ஸலுக்கு என்னை அழைத்துப்போக டாண் என்று வேம்பன் வந்துவிட்டான். நான் கொல்லைப்புறம் சந்தில் போய் இருந்தேன். "பாட்டி எதுக்குடா அழைச்சுண்டு போறே?" என்றதற்கு "கோவிலுக்கு பாட்டி. பெருமாள் சேவிக்க" என்று சொல்வது கேட்டது. புறக்கடைக்கே வந்து "டேய்! என்ன இது ஒளிஞ்சிண்டிருக்கே. வரதனுக்குத் தெரிஞ்சா டின் கட்டிடுவான். உனக்காகத்தான் காத்துண்டு இருக்கா எல்லாரும். வந்துரு" என்றான்.

மாமியார் வீட்டுக்குப் போகும் குரங்குபோல அவன் பின் சென்றேன்.

வரதன் வீட்டு மாடியில் எல்லாரும் கூடியிருந்தார்கள். அந்த தாராமணி மெயின்கார்டு கேட்டிலிருந்து பஸ் பிடித்து வந்திருந்தாள்.

"என்னது எல்லாம் சின்னப் பிள்ளைங்களா இருக்கே" என்றாள்.

எல்லாரும் தாராமணியையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க, "இத பாரு, இவன்தான் தோழி" என்று என்னை தாராமணிக்குக் காட்டினான். தாராமணி பெரிசாகப் பொட்டு வைத்திருந்தாள். முகம் உழுத மாதிரி இருந்தது.

"பொட்டைப்புள்ள போலத்தான் இருக்குது. சரிதான்! என்ன வரது இந்தப் பேரை மாத்திரேன்! என்ன அது. குஸுமா! நல்லாவே இல்லையே!" என்றதும் கொஞ்சம் பெரிய பையன்கள் சிரித்தார்கள். வரதன் அவர்களை அதட்டி, "குஸுமான்னா தாமரைப்பூன்னு அர்த்தம் ஸம்ஸ்க்ருதத்திலே" என்றான்.

"தமிழ்ல வேற அர்த்தம் ஆயிர்றதே? எதுக்கு சொல்ல வறேன்னா சீரியஸா இருக்கிற இடத்திலே சிரிப்பு வந்திருச்சுன்னா?

அதுக்குத்தான்!"

பெட்ரோமாக்ஸ் வந்தது.

"சரி சரி" என்ற வரதன் "ஸ்கிரிப்ட் பார்த்துப் படிரா, டேய்" என்றான்.

அம்பி "ஆயிரங்கோடி பொற்காசும் அழகுடைய நாடகக் கணிகை நங்கையர் ஆயிரவரும் உயர்ந்த பீதாம்பரமும்" என்று படிக்க வரதன் நடுவில் உட்கார்ந்துகொண்டு அடிக்கடி தலையை ஆட்டிக் கொண்டு, இல்லாத மீசையை பின்கையால் நீவி விட்டுக்கொண்டு இருந்தவன் திடீர் என்று என்னைப் பார்த்து "வாடா பின்னால்" என்று அழைத்து "டேய் கீழேபோய் ஒரு விசிறி எடுத்துண்டு வாடா" என்றான்.

கொண்டுவரப்பட்ட பனை விசிறியை "டிராமால இதைவிட பெரிசா இருக்கும். இப்ப சத்திக்கு இதை விசிறு" என்று என்னைப் பின்னால் நிற்கவைத்துத் தோழியாக மெல்ல விசிறச் சொன்னான். திடீர் என்று வேம்பன் என்னைப் பார்த்து "அடி திலகவதி" என்று கீச்சுக் குரலில் கூப்பிட்டதை வரதன் கட்டுப்படுத்தினான்.

"ஒண்ணும் இல்லைடா. நீ சும்மா இந்த மாதிரி விசிற வேண்டியது தான்." என் சகாக்கள் முன்னாலே நிற்கவே வெட்கம் பிடுங்கித் தின்னும்போது, சபையில் அதுவும் பெண் வேஷத்தில், எப்படி நிற்கப் போகிறேன் என்று நினைத்ததுமே கதி கலங்கியது. அப்புறம் அந்த திருச்சி தாராமணி வேறு மற்ற பேருடன் சேர்ந்துகொண்டு என்னை கலாட்டா செய்து உச்சிமோந்து 'தோழி!' என்று கன்னத்தை அடிக்கடி கிள்ளிக்கொண்டிருந்தாள். ஒன்றும் நன்றாக இல்லை. எதிரே மற்றொரு பாட்ச் அட்டையில் உடைவாள் வெட்டி அதில் ஸில்வர் பேப்பர் ஒட்டிக்கொண்டிருந்தார்கள்.

இந்த இடத்தில் வரதனின் கலை, இலக்கிய வாழ்க்கையைப் பற்றி ரெண்டு வார்த்தை சொல்ல வேண்டும்.

கொஞ்ச நாள் முன்பு மோர்சிங் கற்றுக்கொள்கிறேன் என்று ஆரம்பித்து மூன்று மாசம் கொங்கி கொங்கி என்று கெந்திக் கொண்டிருந்தான். நாக்கு தடித்துப் போனதால் அதை விட்டு விட்டான்.

இலக்கியத்தைப் பற்றியவரையில் 'பேசும்படத்'தில் அவன் கேட்ட கேள்வி ஒன்று வந்திருக்கிறது. சுந்தரிபாய் நடித்த 'கண்ணம்மா என் காதலி' படத்தைப் பற்றி; அப்புறம் அரு. ராமநாதன் ஆசிரியரா யிருந்த 'காதல்' பத்திரிகையில் சலனம் என்று ஒரு கதை, ஜி. வி. என்று போட்டு வந்திருந்தது. அது தான்தான் எழுதியது என்று சாதித்தான். சிலவேளை எங்களை எல்லாம் சுற்றிவர உட்கார வைத்து புதுமைப்பித்தன், கு. ப. ரா., பாரதிதாசன் என்று படித்துக் காண்பிப்பான். 'கற்பு கற்பு என்று கதைக்கிறீர்களே, இதுதானய்யா பொன்னகரம்' என்று ஆக்ஷன் கொடுத்துப் படிப்பான்.

கலையைப் பொறுத்தவரை கிருஷ்ணஜயந்திக்கு ஒரு ஸ்டூலைக் கவிழ்த்து நாலு பக்கமும் பிளைவுட் அடித்து உள்ளே ரசகுண்டு ஜரிகை நெளி எல்லாம் தொங்கவிட்டு கிருஷ்ணருக்கு அலங்காரம் பண்ணி எங்களை சித்திரை நாலு வீதியும் தூக்கிக்கொண்டு போகச் சொல்லுவான். அதோடு சரி.

இப்போது 'வீரசிம்மன்.' அது எந்த மாதிரி நாடகம் என்பது எனக்கு ரிகர்சலில் பிடிபடவில்லை.

'வீரசிம்மன்' மே மாசம் 5ஆம் தேதி ஹைஸ்கூல் ஹாலில் நடக்க ஏற்பாடாகியிருந்தது. சேர்மன் வந்து தலைமை தாங்குவதாக இருந்தது. அவர் கடைசி நிமிஷத்தில் ஹைட்ராஸில் ஆப்பரேஷனுக்குப் போய்விட்டதால் வடக்குச் சித்திரைவீதிப் பட்டாவைக் கூப்பிட்டார்கள். அவன் வண்டி கட்டிக்கொண்டு நாலு மணிக்கே தலைமை தாங்க வந்துவிட்டான்.

நான் மேக்கப்புக்குப் போனபோது மணி ஆறு இருக்கும். டிக்கெட் நிறைய விற்றிருந்தார்கள் போலும். அப்போதே கணிசமான அளவுக்குக் கூட்டம் இருந்தது.

பால்காரர்கள் நிறைய பேர் வந்திருந்தார்கள் குவளையும் கயிறுமாக. பசுமாடு பரிசு என்பதே ஒரு புதுமையாகி ஊரே கொல்லென்று போய்விட்டதாக பட்டா சொன்னான். பசுமாடு நிசமாகவே கொட்டகை வாசலில் கட்டியிருந்தது. நன்றாகக் குளிப்பாட்டப்பட்டு நெற்றியில் குங்குமம் பெரிசாக இட்டுக்கொண்டு கொம்புக்கு வர்ணம் பூசிப் பக்கத்தில் கன்றுக்குட்டியுடன் நெர்வஸாக அடிக்கடி சாணி போட்டுக்கொண்டு எல்லார் பார்வைக்கும் வைக்கப்பட்டிருந்தது.

மாட்டைப் பார்த்ததும் நாடகம் பார்க்கலாமா வேண்டாமா என்று தயங்கிக்கொண்டிருந்தவர்கள் சிலர் தீர்மானித்து ஓட்டைக்குள் கைவிட்டு டிக்கெட் வாங்கினார்கள். நான் போனபோது வரதன் கைக்கடிகாரத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

"எங்க இந்த தாராவை இன்னும் காணோம்? வாடா டேய்! வா! ஏன் நீகூட லேட்டா வரியா? ஏய் முத்து, இவனுக்கு மேக்கப் போடு. தோழி வேசம், தாரா! அப்பா ... வந்தியா! எங்கக் காலை வாரி விட்டுருவியோன்னு பயமா போய்டுத்து. இப்பவே எவ்வளவு கூட்டம் பார்த்தியா!"

நான் ஹெட்மாஸ்டர் மட்டும் உபயோகப்படுத்தும் மாடிப்படி வழியாக ஏறி ஸ்டேஜ் என்ட்ரன்ஸின் உள்ளே சென்றேன்.

பரபரப்பாக இருந்தது. வேம்பன் மீசை தீட்டிக்கொண்டிருந்தான். அம்பியை ஜிலுஜிலு என்று சேனாதிபதியாக்கிக்கொண்டிருந்தார்கள். ஒரு ஆர்மோனியப் பெட்டி இருந்தது. சிம்மாசனத்திற்கு இப்போதுதான் தங்கம் ஒட்டிக்கொண்டிருந்தார்கள். ஆர்மோனியக்காரர் கையில் எதையோ தேய்த்து உருட்டி வாயில் அடைத்துக்கொள்வதை 'அபினி' என்று சொன்னான் கேவி. என்னை சட்டையைக் கழற்றச் சொன்னார்கள். "ஏண்டா பனியன் போட்டுண்டு வரமாட்டியோ ..."

"விட்டுர்றா, வேண்டாம்டா." அதற்குள் வரதன் மேற்பார்வைக்கு வந்துவிட்டான்.

"யார்றா அழறது? சீ அசடு! இதுக்கெல்லாம் அழலாமோ? என்னை அறியாமல் என் கன்னத்தைப் பலபேர் சுத்தம் செய்ய, பஃப் வைத்து பவுடர். அதே சமயம் கண்ணுக்கு மையும் நெற்றிக்கு பொட்டும் இட்டார்கள், தலைமேல் என்னவோ கட்டி ஜடை பில்லை குஞ்சலம் எல்லாம் வைத்துப் பின்னிவிட்டார்கள். பனியனைப் போட்டுவிட்டு அதற்குள் முதலில் இரண்டு கர்ச்சீப்புகளைத் திணித்துப் பார்த்து போறாது என்று சொல்லி, இரண்டு பூப்பந்து வைத்து பார்த்து அதுவும் நிராகரிக்கப்பட்டு அவசரமாக டிபிஜி கடைக்கு ஒருத்தன் ஓடிப்போய் இரண்டு ரப்பர் பந்து வாங்கி வந்தான். இதாண்டா சரி என்று என் மார்பில் திணித்தார்கள். பட்டில் பாவாடை கட்டிவிட்டு, அதன் மேல் மெலிசாக மேலாக்கு போட்டு, ராஜபுத்ர ராஜகுமாரி போல தலைமேல் கொண்டு வந்து, இடுப்பில் செருகி –

"எதுக்குடா அழறே? கன்னங்கன்னம்மா இழைச்சுருவேன். பவுடர் எல்லாம் கரைஞ்சுப் போச்சு பாரு!"

தாராமணி, "அழாத தம்பி! நல்லா அழகாவே இருக்கே" என்றாள். அம்பி மேலும் கீழும் நடந்துகொண்டே பரீட்சைக்குக் கடைசி நேரம் போல "ஆயிரங்கோடி பொற்காசும், ஆயிரங்கோடி பொற்காசும்" என்று திருப்பித் திருப்பிச் சொல்லிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

வேம்பன் என்னைப் பார்த்து 'ஹை' என்று ஆச்சரியப்பட்டான். வரதனும் உள்ளே வந்து "சபாஷ்!" என்றான். "என்ன தாரா! கூட்டத்தைப் பார்த்தியா? நான் மேக்கப்புக்குப் போக வேண்டியது தான்."

கோவிலிலிருந்து பெரிசாக ஒரு சாமரம் கொண்டுவந்ததை என்னிடம் கொடுத்து டிரையல் பார்க்கச் சொன்னார்கள். அதை எடுத்ததும் கரப்பான் பூச்சி ஓடி என் மாராப்புக்குள் புகுந்து கொண்டுவிட, "கர்ட்டன்! கர்ட்டன்! கர்ட்டன் தூக்கப் போறாங்க!"

அந்த நாடகத்தைச் சமகால இலக்கியம் எதிலும் வகைப்படுத்துவது கஷ்டம். அது முழுக்க முழுக்கச் சரித்திர நாடகம் இல்லை. அதை இரண்டு பாகமாகப் பிரிக்கலாம். வீரசிம்மனின் கதையில் வீரசிம்மன் போரில் தற்காலிகமாகத் தோற்றுப்போய் பக்கத்து நாட்டில் சங்கிலியால் பிணைக்கப்பட்டு சபைக்குக் கொண்டு வரப்படுகிறான். கப்பம் கட்ட மறுக்கிறான். அந்த நாட்டு ராஜகுமாரி குஸுமா செண்டாடும் போது சன்னல்வழியாகப் பார்த்து மையல் கொண்டு பாடுகிறாள் ... இப்படிப் போகிறது கதை.

காட்சி மாறும்போது மேடையின் முன் பக்கத்தில் பஸ் ஸ்டாண்டும் வீதியும் வரைந்த படுதா போட்டு இரண்டு பேர் காமிக் செய்யும் 'சமூகப் பகுதியும் இருந்தது. மூக்குப் பொடி போட்டுக்கொள்வதைப் பற்றி தமாஷாகப் பேசினார்கள்.

அப்புறம் 'சகுந்தலை' படத்திலிருந்து எம்.எஸ். பாடிய

'எந்தன் இடது தோளும் கண்ணும் துடிப்பதென்ன?
இன்பம் வருகுதென்று சொல் சொல் சொல் கிளியே'

என்பதை மொழிபெயர்த்து மெட்டு மாறாமல்,

'மை லெஃப்ட் ஹாண்ட் ஷோல்டரும் ஐயும் துடிப்பது ஒய்?
ப்ளெஷர் வருகுதென்று டெல் டெல் டெல் பாரட்டே'

என்று பாடினார்கள்.

முன்வரிசையில் லேசாகச் சிரித்தார்கள்.

நான் நடித்த முதல்காட்சி வந்தது. வீரசிம்மன் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்க படுதா ஓரத்தில் நின்றுகொண்டு நான் விசிற என்னை ஐஸால் பண்ணி வைத்ததுபோல உணர்ந்தேன். நாலு விசிறு விசிறினதும் தைரியம் வந்துவிட்டது.

சுற்றுமுற்றும் பார்த்தேன். முதல் வரிசையில் கோடியில் சில்க் சர்ட்டும் மீசையுமாக இருந்த ஒருவர் என்னைப் பார்த்துக் கண்ணடித்தார். சட்டென்று வீரசிம்மனைப் பார்த்து சற்று வேகமாக விசிற ஆரம்பித்தேன். திடீர் என்று கொட்டகை பூரா விசில் கேட்க நான் என்ன ஏது என்று தெரியாமல் வரதன் என்னை ஏன் முறைக்கிறான் என்று தெரியாமல் இன்னும் பலமாக விசிற, வேம்பனுக்கு பார்ட் இல்லாததால் என்னை சைடாக இழுத்து மேலாடை விலகியிருந்ததைச் சரிபண்ணி அனுப்பினான். ஆட்டம் பாதியிலேயே "வீட்டுக்குப் போகணும் பிரைஸ் கொடு; பிரைஸ் கொடு!" என்று மக்கள் கலாட்டா செய்து கைமணி அடித்து இண்டர்வல் விட்டார்கள்.

நான் திரைவழியாகச் சற்றே எட்டிப் பார்த்தபோது அந்த சில்க் ஆசாமி மறுபடி கண்ணடித்தார்.

பிரம்பு நாற்காலி போட்டு பட்டாவை உட்கார வைத்து ஒரு தகரப் பெட்டிக்குள்ளிருந்து குலுக்கி 3846 என்று நம்பர் சொன்னார்கள் உடனே சபையோரிலிருந்து ரங்கசாமி எழுந்து வந்து டிக்கெட் என்னுது என்று சொல்லி ஓடிவர முன் வரிசையில் தகர நாற்காலிகளை நகர்த்தி பசுமாடு வர வழி பண்ண, அது உள்ளே நுழைய மறுத்ததால் கதவருகிலேயே பரிசளிப்பு விழா நடைபெற்றது. அந்த நாடகம் முற்றுப் பெறவில்லை. திடீர் என்று வெளியே ரகளை. நான் க்ரீன்ரூம் சன்னல் வழியாக எட்டிப் பார்த்தபோது கீழ்வரும் உரையாடல்:

"என்ன ரங்கசாமி, இதேமாதிரி காராம்பசு உங்கிட்ட ஒண்ணு இருக்குதில்லை?"

"கிட்டதட்ட இதேமாதிரிதான்."

"இல்லை, இதேதான் போல இருக்கு! தேமல்கூட சரியா இருக்கு. கன்னுக்குட்டிகூட அதே கலர்தான்! ரங்கசாமி, உண்மை என்ன? சொல்லு விஷயத்தை!"

"அது வந்துங்க . . . ரெண்டு பசுவும் ரெட்டை . . ."

"இரு வரதா நீ என்னவோ ஏக்கிறேன்னு தோணுது. ரங்கசாமி தனியா வரியா!"

ரங்கசாமியின் கழுத்தைச் சற்றி சவுக்கத்தைப் போட்டு முறுக்கி தனியாக அழைத்துச் சென்றதில் அவன் எல்லாவற்றையும் கக்கிவிட்ட தாகத் தெரிந்தது.

பசுமாடு வரதன் வாங்கி வந்தது இல்லையாம். டெம்பரவரியாக ரங்கசாமியிடமிருந்து வாங்கிவந்து ரங்கசாமிக்கே பரிசு விழும்படி ஏதோ ஒரு 'செட்டப்' போல! ரங்கசாமியின் பக்கத்து வீட்டுக்காரன் நாடகத்துக்கு வந்திருந்ததால் விஷயம் சட்டென்று வெளியே வந்துவிட்டது.

"பணத்தைத் திருப்பிக் கொடு" என்று கூச்சல். தம் தம் என்று தகரக்கூரை மேல் கற்கள் விழுந்தன.

வரதன் தலைதெறிக்க உள்ளே ஓடி வந்து "அவ்வளவ்தான் டிராமா. எல்லாரும் ஆத்துக்குப் போங்கோ!" என்று சொல்லிவிட்டு சிட்டாய்ப் பறந்து போனான்.

எனக்கு பனியனையோ பந்தையோ கழற்றச் சமயமில்லாமல் பாவாடையுடன் ஓடினேன். குறுக்கே சில்க் ஆசாமி மேடைக்கு வந்து என்னைத் தடுத்து "வா கண்ணு" என்றார். "ஸார் நான் பையன் ஸார், பையன் ஸார்" என்று சொல்லிக்கொண்டே மாடிப் படியில் சரிந்து இறங்கி ஓடிக் கொள்ளிடம் ரோடு வழியாக வேஷத்தைத் துறந்து இருட்டில் வீட்டுக்கு வந்து சேர்ந்தபோது மணி பதினொன்று. பாட்டி, "இதோ நாளைக்கே உங்கப்பாவுக்கு லெட்டர் போடுகிறேன்" என்று கொதித்தாள்.

மறுநாள் வரதனை வீட்டில் காணவில்லை. மகேந்திரமங்கலம் போயிருக்கிறதாகச் சொன்னார்கள். அதன்பின் வரதனைச் சந்தித்தாக ஞாபகமில்லை. 'வீரசிம்ம'னில் நடித்ததற்காக எனக்கு ஒப்பந்தப்பட்ட அந்தப் படங்கள் காட்டப்படவே இல்லை. அதன்பின் வரதன் வருஷாவருஷம் கொஞ்ச காலம் டிராமா போட்டான்.

இதெல்லாம் நடந்துபோய் முப்பது வருஷங்களுக்குப் பிறகு சமீபத்தில் ஸ்ரீரங்கம் போயிருந்தபோது வரதனுடன் வரதன் வீடும் காணாமற் போயிருந்தது. பாத்திரக்கடை நாராயணசாமி அதை வாங்கி இடித்துக் கட்டி முகத்தை மாற்றி போஸ்டல் ஸூப்ரண்ட் ஆபீசுக்கு வாடகைக்கு விட்டுவிட்டார். வீட்டின் முகப்பில் தகர போர்டில் அரசாங்கம் தெரிந்தது.

வரதன் தன் பையனுடன் பம்பாயிலோ எங்கேயோ வயசாகிப் போய் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். இறந்துகூடப் போயிருக்கலாம். அவன் உயிரோடு இருந்தாலும் அவன் காலத்தில் இருந்த ஒருவிதமான ஃப்யூடலிஸமும், சவுடால்தனமும், உல்லாசமும், வீழ்ச்சியும், கவிதையும் கலந்திருந்த அந்த சகாப்தம் இறந்துவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

1981